[29th September 1961

(*b*) the present stage of progress.

THE HON. SRI V. RAMAIAH : (*a*) and (*b*) A statement [a] is placed on the table of the House.

SRI M. KALYANASUNDARAM : ஸார், கல்மந்தை, பீச்சாங்குளம் ஆகிய இரண்டு சேரிகளும் திருச்சி நகரத்தில் எடுக்கப்பட்டிருக்கிறது என்று அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அந்த முனிசிபாலிடிகள் அனுப்பிய திட்டங்களே இந்த இரண்டு சம்மந்தப்பட்டவைதானு அல்லது ஏதாவது அவர்கள் அனுப்பியது நிராகரிக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI V. RAMAIAH : என்னிடத்தில் உள்ள தகவல் இந்த இரண்டு சேரிகள் சம்மந்தமானதுதான்.

SRI N. MARUDACHALAM : ஸார், சேரி ஒழிப்பு திட்டம் கோவை நகரசபை சம்பந்தமாகவும் எடுக்கப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது......

DEPUTY SPEAKER : மூலக்கேள்வி திருச்சி பற்றியது, கோவை பற்றியது அல்ல.

SRI M. KALYANASUNDARAM : திருச்சியில் இந்த இரண்டு திட்டங்களும் குறைந்தது 5, 6 வருஷமாக வகுக்கப்பட்டது. அதற்காக நிலம் வாங்கப்பட்டுவிட்டதா ? எவ்வளவு காலதாமதம் ஆகும் ?

THE HON. SRI V. RAMAIAH : இந்த இரண்டு திட்டங்களும் சென்ற வருஷத்திலிருந்துதான் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. நாம் அதைபற்றி சொல்லிக்கொண்டே இருந்திருக்கலாம். ஆனால், ஸ்லம் கிளியரன்ஸ் மொபசிலுக்கு வந்தது சென்ற வருஷத்திலிருந்துதான். திட்டம் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு, அதற்கு வேண்டிய சர்வே போன்ற பூர்வாங்க வேலைகள் நடக்கின்றன. அதற்கு மேல் தகவல் என்னிடம் இல்லை.

*Auto-rickshaws (licensing)*

* 1901 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether there is any proposal to restrict the issue of licences to Auto-rickshaws in the City and other district centres;

(*b*) if so, the reasons therefor?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI N. K. PALANISAMI : 1961-ம் வருஷத்திய சென்ஸஸுக்குப் பிறகு ஏராளமான மக்கள் டௌனில் குடியேறி இருக்கிறார்கள் என்பது நமக்குத் தெரியும். இருக்கக்கூடிய ஆட்டோ-ரிக்ஷாக்கள் போதவில்லை என்கிற காரணத்தினால், அதை லிபரலைஸ் பண்ணி அதிக ரிக்ஷாக்களைப்போட நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : இப்பொழுதும் அதிகமாகக் கொடுக்கத் தடையொன்றும் இல்லை.

---

[a] Printed as Appendix I on page 426 infra.